30th September 1958]

(*d*) No special devices as such have been proposed but full and adequate provision has been made taking all factors into consideration to withstand heavy and sudden floods.

**Sri S. LAZAR:** இந்தப் பாலம் அமைத்திருக்கக்கூடிய இடமாகப் பட்டது, அதிகமாக தண்ணீர் வரும்போது குத்திவிடக்கூடிய முறையில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அதற்கு தனிப்பட்ட முறையில் ஏதாவது நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கிறதா ?

**The Hon. Sri P. KAKKAN:** ஏற்கனவே பாதிக்கப்பட்ட பாலத்தை செப்பனிடுவதைவிட புதிதாக ஒரு பாலம் கட்டுவதுதான் நல்லது. ஆகவே இந்த இடத்தைப் பார்த்து அங்கு பாலம் கட்டி வருகிறார்கள். எந்த விதமான கெடுதியும் வராது என்று நினைக்கிறேன். அங்கத்தினரின் யோசனையை கவனிக்கிறேன்.

### *Shark Liver Oil*

* 642 *Q.*—Sri A. VEDARATHNAM: Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether Shark Liver Oil is produced in this State;

(*b*) if so, where;

(*c*) what is the annual production; and

(*d*) if no, whether there is any proposal to establish such a factory; if so, where?

**The Hon. Srimathi LOURDHAMMAL SIMON:** (*a*), (*b*) & (*c*) Crude Oil is being extracted by the Fisheries Department from the Shark livers collected in the East Coast of this State and the oil is sold to the Oil Factory at Kozhikode. There is no factory in this State now to refine the Crude Oil. About 10 tons of crude oil are at present produced.

(*d*) At present there is no possibility of running an oil factory in this State as at least 30 tons of crude oil would be required for a factory. However, efforts are being made to increase the production of crude oil so as to satisfy the minimum requirement of an oil factory.

**Sri A. VEDARATHNAM:** இங்கிருந்து ஷார்க் லிவர் ஆயில் பாக்டரி கேரளத்திற்கு போய்விட்டதால் அதற்குப் பிறகு நம் ராஜ்யத்தில் அப்படிப் பட்ட பாக்டரி ஒன்றை இங்கு ஆரம்பிக்கவேண்டியது அவசியமல்லவா ? சென்னை கடற்கரையில் சுறா மீன்கள் அதிகமாக கிடைப்பதால் இங்கு அப்படி ஒரு பாக்டரி ஆரம்பிக்க அரசாங்கம் முன்வருமா ?

**The Hon. Srimathi LOURDHAMMAL SIMON:** சென்னையில் 10 டன் எண்ணெய்தான் கிடைக்கும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. அதைக்கொண்டு ஒரு மீன் எண்ணெய் பாக்டரி ஆரம்பிப்பது சிரமமான காரியம். ஆகவே, கூடுதலான முறையில் எண்ணெய் சேகரிக்கும் வழிகளை ஆலோசித்துப் பார்த்து ஒரு ஆயில் பாக்டரி ஏற்படுத்த அரசாங்கம் கவனம் செலுத்திக்கொண்டு வருகிறது.